# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி – மாசி – 2019 – பிப்ரவரி

80

நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் மூன்றாவது பட்டமளிப்பு விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி – மாசி – 2019 – பிப்ரவரி இதழ் – 80

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




ஏறூர்ந்தான் காதலியே இமயரசன் திருமகளே

இனியமறைக் கருப்பொருளே! ஆல வாயில்

இருப்பவளே! சொக்கனுக்கு வலத்தே நின்ற

இளங்குயிலே! செந்தமிழ்நற் பாண்டி நாடு

மாறாதே ஆள்கின்ற மாதரசி தென்பொதிய

மலைத்தென்றல் கொண்டுவரும் மணத்தை ஏற்று

மகிழ்கின்ற மங்கையே! ஆழி தாங்கும்

மாலுக்குத் தங்கையே! சுடலைச் சாம்பல்

ஏறிடவே காடாடும் ஈசன்மகிழ் பெண்பாவாய்

ஏதங்கள் தனைப்போக்கி எம்மை ஆளும்

ஏந்திழையே! வன்னிவனம் இருக்கும் தாயே!

எழிற்கொற்ற வாளீசன் வலத்தே நின்றாய்

ஆறதனைத் தாங்குமுடி ஆண்டவர்க்கு மனையாட்டி

அம்புயத்தாள் பரமேட்டி ஆனாய் நீயே

அருள்தருமோர் கொற்றவையே நெல்லை என்னும்

ஆரணங்கே உன்பெருமை சொல்லப் போமோ!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

தை பிறந்தால் வழி பிறக்கும் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட பழமொழி. ஆனால் இயற்கைச் சீற்றங்களாலும், இயற்கை மாறுபாட்டினாலும் துன்பங்கள் அதிகரித்து வலி நம் கண்களுக்குத் தெரியாமல் திரை போட்டு விடுகிறது. அந்த இயற்கைச் சீற்றங்களையும், மாற்றங்களையும் எதிர் கொள்வதற்கு மன உறுதியும், கடுமையான உழைப்பும் தேவையே ஒழிய மனம் கலங்கிச் சோர்ந்து அமர்வதும் நம் துயரைத் தீர்க்க யாராவது வரமாட்டார்களா? என ஏங்கிப் பொழுதைக் கழிப்பதும் நல்லதல்ல.

வாழ்விலே ஏற்றத் தாழ்வுகள் யாவருக்கும் வருவது இயற்கை. ஏற்றம் வருகிறபொழுது மகிழ்ச்சியால் ஆடாமலும், தாழ்வு வருகிற பொழுது சோகத்தால் சோராமலும் எல்லாவற்றையும் நம்பிக்கையோடும், தைரியத்தோடும் எதிர்கொள்வதே மனிதரின் கடமை. அவசர ஆத்திரத்திற்கு அடுத்தவரிடம் உதவி கேட்கலாம்; உதவி பெறலாம். ஆனால் அதுவே வாழ்க்கை முறையாக இருக்கக் கூடாது. உங்களுடைய பொருள்களையோ, விளையும் தானியங்களையோ முறைப்படி காப்பீட்டுத் துறையில் பாதுகாப்புச் செய்யலாம். இயற்கை மாற்றத்தாலே விளையாக் காலங்களில் காப்பீட்டுத் தொகைகளைப் பெற்றுக் கொள்ளலாம். அதனையே முறை தவறி, பொய்களைக் கூறி, காப்பீட்டுத் தொகையைப் பெறுவது தருமத்திற்கு முரணானது.

பொதுவாக உரிமைகளை முறைப்படி பெற்றுப் பயன்களை அனுபவிக்கலாம். அதே சமயம் கடமைகளை முறைப்படி நிறைவேற்றியே ஆக வேண்டும். இந்தக் கால கட்டத்தில் கடமை,

தர்மம், வழிமுறைகளைப் பற்றிக் கவலைப்படாமல் வேண்டியவற்றை எல்லாம் எப்படியோ பெற்றுச் சுகமாக வாழ வேண்டும் என்ற எண்ணம் ஓங்கி நிற்கின்றது. உழைப்பை நம்பி நேர்மை வழியில் கடமைகளை ஆற்றி வெற்றி பெற முடியும். அப்படி இன்றித் தேர்விற்குப் படிக்காமலேயே எப்படியாவது தேற வேண்டும் என்று விரும்பும் இளம்பிள்ளைகளைப் போல உழைக்காமலே சுகமாக வாழ வேண்டும் என்பது முறையான சிந்தனை இல்லை. முறையாகப் பலன் தரக்கூடியதும் அல்ல. நல்லவற்றைச் சிந்தித்து, தன்னம்பிக்கையோடு, நெறிமுறையோடு உழைத்து நாமும் முன்னேறுவோம், சமுதாயத்தையும் நாட்டையும் முன்னேற்றுவோம்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



## அதிமதுர கவிகள் (தொடர்ச்சி)

### காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**ராமா ராமா கோவிந்தா**

ஓர் இளைஞன் ஓர் அழகான இளம்பெண்ணைக் கண்டு வியப்புடன் ராமா ராமா கோவிந்தா! என்று இடைவிடாது கூறுவதுபோல் அமைந்த ஒரு வெண்பாவைச் சொல்லும் பார்க்கலாம் என்று புலவர் கேட்க உடனே காளமேகம் கவிதையைப் பொழியத் தொடங்கியது. இந்த வெண்பா இதோ

**இந்தோ திலகநுதல் ராமரா மாவனசக்**
**கொந்தோ களபமுலை கோவிந்தா - சந்தமுறும்**
**வேலோ இணைவிழிகள் வேங்கடவா நல்லவயி**
**றாலோகா ணாரா யணா**

***இதன் பொருள் :*** ராமராமா! இந்தப் பெண்ணின் திலகம் உள்ள நெற்றி பிறை நிலவோ? மணச்சாந்து அணிந்த இவளது மார்பகங்கள் தாமரை மொட்டுக் களோ? வேங்கடவா! இரு விழிகளும் அழகிய வேல் நாராயணா! நல்ல வயிறு ஆலிலைதானோ?

**செருப்பு - விளக்குமாறு**

காளமேகத்தை அவமானப் படுத்த வேண்டும் என்ற நோக்கிலே ஒரு புலவர் செருப்பு என்று தொடங்கி விளக்குமாறு என்று முடியும்படியாக ஒரு வெண்பாவைப் பாடும் பார்ப்போம் என்று சொன்ன அடுத்த நொடியில் ஒரு வெண்பாவைப் பாடினார்; அந்த வெண்பாதான் இது.

முருகன் மேல்காதல் கொண்ட ஒரு பெண் முருகனைச் சேர்வதற்கான வழியைச் சொல்ல வண்டினைத் தூது செல்லச் சொல்வதாக இந்த வெண்பா அமைந்துள்ளது.

**செருப்புக்கு வேழனைச் சென்றுழக்கும் வேலன்**
**பொருப்புக்கு நாயகனைப் புல்ல - மருப்புக்குத்**

**தண்டேன் பொழிந்ததிருத் தாமரைமேல் வீற்றிருக்கும்**
**வண்டே விளக்கு மாறே.**

***இதன் பொருள் :*** குளிர்ந்த தேனைப் பொழியும் அழகிய தாமரை மேல் தங்கியுள்ள வண்டே! போர்க்களத்தில் புகுந்து எதிர்த்த வீரர்களைச் சிதறச் செய்கின்ற வேலனைக் குறிஞ்சி நிலத்தலைவனை நான் தழுவும் உரிய வழியினை விளக்கும் வழியில் விளக்குக. செருப்பில் தொடங்கி விளக்குமாறு என்று முடிகின்ற நயத்தைக் காண்க.

**செங்கழுநீர்க் கிழங்கு**

கச்சிக் காவலன் என்னும் புலவன் செங்கழுநீர்க் கிழங்கு என்ற சொல் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடுக என்ற புலவன் வியக்குமாறு உடனே பாடிய வெண்பா இது.

**வா(து) அமணர் ஏறியதும் மாயன் துயின்றதுவும்**
**ஆதிதடுத்(து) ஆட்கொண்ட அவ்வுருவும் - சீதரனார்**
**தாள்கொண்(டு) அளந்ததுவும் தண்கச்சிக் காவலா!**
**கேள்செங் கழுநீர்க் கிழங்கு**

***இதன் பொருள் :*** குளிர்ச்சி பொருந்திய கச்சி காவலனே! நீ குறித்த பொருளில் நான் பாடக் கேள். திருஞான சம்பந்தருடன் வாதிட்டுத் தோற்ற சமணர்கள் ஏறியதும் மாயவனாகிய திருமால் பள்ளி கொண்டு இருப்பதும் முதல்வனாகிய சிவபெருமான் சுந்தரரைத் தடுத்த அவ்வுருவும் அந்நாளில் திருமால் தன் திருவடி கொண்டு அளந்ததுவும் செங்கழுவும் நீரும் கிழவுருவும் பூமியும் ஆகும்.

இங்கு செங்கழு என்றால் பழுக்கக் காய்ச்சிய கழுமரம் என்பது பொருள். நீர் என்பது கழுவில் வழிந்த சிவந்த குருதியைக் குறிக்கும். பரந்தாமன் பள்ளி கொண்டு இருப்பது பாற்கடல். அது நீரைக் குறிக்கும் சீதரன் என்ற சொல் திருமாலைக் குறிக்கும்.

**கடுங்காற்றும் கடுநட்பும்**

திருமலைராயன் அவையில் பிறவா நெறி காட்டியார் என்னு

மொருபுலவர் இருந்தார். அவர் காளமேகத்தை நோக்கிக் கடுங்காற்று மழைகாட்டும் கடுநட்புப் பகை காட்டும் என்ற தொடரை இறுதியாக வைத்து ஒரு வெண்பாவை இயற்றும் பார்க்கலாம் என்று கேட்ட நொடியில் காளமேகம் பாடிய வெண்பா இது.

**நீரோ பிறவா நெறிகாட்டி யார்எமக்கு**
**நீரோ சமிசை நிலையிட்டீர் - நீரோஇவ்**
**விங்கமென் செய்தீர் விடும்கடுகோற்றும் மழைகாட்**
**டுங்கடுநட் புப்பகை காட்டும்**

***இதன் பொருள் :*** பிறவாத் தன்மைக்கு உரிய நெறிகாட்டும் ஞானவானாய் நீரே இருக்க இப்படிப்பட்ட சமிசையை எமக்குக் கொடுத்தீர்? இவ்வேறுபாட்டை எதற்காகச் செய்தீர்? இனியேனும் இதுபோல் செய்வதை விட்டுவிடும். வேகமாக வீசும் காற்று மழையைக் கொண்டுவரும். ஆராயாது விரைந்து கொள்ளும் நட்பு பகையைத் தரும்.

**குரங்கும் இடமும்**

இன்னொரு புலவர் குரங்கு என்று தொடங்கி இடம் என்று முடியுமாறு ஒரு வெண்பாப் பாடும் என்றிடக் காளமேகம் பாடிய வெண்பா இது.

**குரங்(கு) அனலில் வீழ்ந்து வெறிகொண்டு தேள்கொட்டக்**
**கரஞ்செறியப் பாம்(பு) அலவன் கவ்வ - விரைந்துபேய்**
**பற்றவேகள் உண்டு பச்சைமிள கைக்கடித்தால்**
**எத்தகைபார் சேட்டைக்(கு) இடம்**

***இதன் பொருள் :*** ஒரு குரங்கு நெருப்பிலே விழுந்து விட்டது. அதனால் அதற்கு வெறி உண்டாயிற்று; அப்பொழுது ஒரு தேள் அதனைக் கொட்டிற்று; அப்பொழுது அதன் கையில் ஒரு பாம்பு சுற்றிக் கொண்டது. நண்டு அப்பாம்பைக் கவ்வியது. பின் கள்ளைக் குடித்தது. இத்தனைக்குப் பிறகு பச்சை மிளகையும் கடித்து. ஒருசேட்டை செய்யப் போன குரங்கினால் எத்தனை சேட்டை பார்.

**புங்கங் கொம்பங்கிங் கொன்பது**

புங்கங் கொம்பு அங்கு இங்கு ஒன்பது என்ற சொற்கள் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடுக என்றார் ஒரு புலவர்; உடனே தாமதியாமல் ஒரு வெண்பாவை உரைத்தார் காளமேகம்; அந்த வெண்பா இது.

**எங்கள் மடத்துக்(கு) எரிதுரும்பு வெட்டுதற்குப்**
**புங்கங்கொம் பங்கிங்கொன் பதுபுளி - யங்கொம்பங்**
**கிங்கொன்ப துவெட்டி நறுக்கிய வெள்வேலங்**
**கொம்பங் கிங்கொன் பது.**

***இதன் பொருள் :*** எங்கள் மடத்திற்கு வெட்டிய எரிக்கும் விறகு. இத்துடன் அங்கும் இங்குமாகக் கொண்டுவரப்பட்டவை புங்க மரத்துக் கிளைகள் ஒன்பதும் புளியங்கொம்பு ஒன்பதும் வெட்டி நறுக்கிய வெள்வலங் கொம்பு ஒன்பதும் ஆகும்.

**அப்பா யார்க்கும் இனிது**

திருமலைராயனின் அவைக்களப் புலவர்கள் எப்படியாவது காளமேகத்தைத் திணறடிக்க வேண்டும் என்ற நோக்குடன் வாய்க்கு வந்தபடி சமிசைகளைக் கொடுக்கலாயினர். அந்த நிலையில் ஒரு புலவன் அப்பா என்று தொடங்கி யார்க்கும் இனிது என்று முடியும்படி ஒரு வெண்பாவைப் பாட முடியுமா? என்றிடக் காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

**அப்பா குமரகோட் டக்கீரை வெவ்விலிமேட்**
**டுப்பாகற் காய்பருத் திக்குளநீர் - செப்புவா**
**சற்காற்றும் பம்பத் தடியில் தவம்கருமா**
**றிப்பாய்ச்சல் யார்க்கும் இனிது.**

***இதன் பொருள் :*** அப்பனே! குமரகோட்டை என்னும் இடத்தில் விளையும் கீரையும் செவ்விலி மேடு என்னுமிடத்தில் விளையும் பாகற்காயும் திருப்பருத்திக் குளத்துத் தண்ணீரும் காஞ்சிபுரக் கோவிலின் தெற்குக் கோபுர வாசலில் வருகின்ற காற்றும் ஏகம்பர்

இருக்கும் மரத்தடியில் தவம் செய்தலும் கருமாறி என்னுமிடத்து நீரைப் பாய்ச்சலும் அனைவருக்கும் இனிதாகும்.

**கரியும் உமியும்**

கரி என்று தொடங்கி உமி என்று முடியும்படியாக ஒரு வெண்பா வைப்பாடுக என்று ஒரு புலவர் வினவக் காளமேகமும் கரியதனை என்று தொடங்கும் வெண்பாவைச் சொன்னார். அப்பொழுது அவையில் இருந்த பெண்பாற் புலவர் ஒருவர் அதனையே சமிக்ஞையாகக் கொடுத்துப் பாடுக என்றதும் அவரை ஏளனம் செய்யும் விதமாக அதே பாடலை மீண்டும் சொன்னார். அந்த வெண்பா இது.

**கரிக்காய் பொரித்தாள் கன்னிக்கா யைத்தீய்த்தாள்**
**பரிக்காயைப் பச்சடியாப் பண்ணாள் - உருக்கமுள்ள**
**அப்பைக்காய் நெய்த்துவட்டல் ஆக்கினாள் அத்தைமகள்**
**உப்புக்காண் *சீச்சீ* உமி**

***இதன் பொருள் :*** அத்தைமகள் அத்திக் காயைப் பொரித்து வைத்தாள். வாழைக் காயை வதக்கி வைத்தாள். மாங்காயைப் பச்சடியாய்ச் செய்தாள். அனைவர்க்கும் விருப்பமான கத்திரிக்காயை நெய்த்துவட்டல் ஆக்கினாள். ஆனால் அத்தனையும் உப்பு. ஆதலால் உமிழ்ந்து விடு.

**மன் - மலுக்கு**

அடுத்து ஒரு புலவர் எழுந்து மன் என்று தொடங்கி மலுக்கு என்று முடியுமாறு வெண்பா ஒன்று பாடுக. என்றதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

**மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்**
**பன்னும் தலைச்சவரம் பண்ணுவதேன் - மின்னின்**
**இளைத்தவிடை மாதர் இவன்குடுமி பற்றி**
**வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு**

***இதன் பொருள் :*** இதனைக் கேட்ட புலவர் சம்பந்தாண்டான்

என்பவர். அவரை ஏளனம் செய்து பாடிய வெண்பா. அவர் தலையை மழுங்கச் சவரம் செய்திருந்தார். அதனால் அதையே பொருளாக்கிப் பாடினார்.

நிலைத்த புகழுடைய திருவண்ணாமலையைச் சேர்ந்த சம்பந்தாண்டான் என்பவருக்குச் சிறப்பாகத் தலைச்சவரம் செய்வதேன்? மின்னல் போல் இடையுடைய பெண்கள் இவன் குடுமியை வளைத்து இழுத்துக் கொட்டா மலுக்கு என்பதை அறிக.

**பச்சை வடம் பாகு சேலை சோமன்**

பச்சை வடம் பாகு சேலை சோமன் இந்தச் சொற்கள் வருமாறு ஒரு வெண்பாவைச் சொல்லும் என்ற புலவர் வியக்கும்படி காளமேகம் கணப்பொழுதில் பாடிய வெண்பா இது.

**மாயன் துயின்றதும் மாமலராள் சொல்லுவதும்**
**ஏய குருந்தில்கொண்(டு) ஏறியதும் - தூயை**
**இடப்பாகன் சென்னியின் மேல் ஏறியதும் பச்சை**
**வடப்பாகு சேலைசோ மன்**

***இதன் பொருள் :*** மாயவனாகிப் பேரூழிக் காலத்தில் பச்சை நிறமுள்ள ஆலிலையில் கண் வளர்ந்ததுவும் சிறந்த தாமரைமலர் மேல் வீற்றிருக்கும் திருமகள் பாகுபோல் இனிக்கும் சொல்லும் கண்ணன் குளத்தில் நீராடிக் கொண்டிருந்த கோபியரின் ஆடைகளைக் கவர்ந்து கொண்டு குருந்த மரத் தின்மேல் ஏறியதும் தூயவளான உமையவளை இடப்பாகத்தில் வைத்திருக்கும் சிவபெருமானின் திருமுடியில் ஏறி இருப்பதும் (சோமன்) பச்சை வடம் பாகு சேலை சோமன்.

**மும்மூர்த்திகள்**

சிவன் திருமால் நான்முகன் எனக் கூறப்படும் மும்மூர்த்திகளின் பெயரும் அவர்கள் உண்ணும் உணவு ஏந்தும் ஆயுதம் பூணும் அணிகள் ஏறும் ஊர்திகள் வசிக்கும் இடங்கள் ஆகியன அனைத்தும் அடங்கிய வகையினை ஒரு வெண்பாவில் உம்மால் பாட முடியுமா? என்று புலவர் கேட்க உடனே விரைந்து பாடிய வெண்பா இது.

**சிறுவன் அளைபயறு செந்நெல் கடுகு**
**மறிதிகிரி தண்டு மணிநூல் - பொறிஅரவம்**
**வெற்றேறு புள்அன்னம் வேதன்அரன் மாலுக்குக்**
**கல்தாழும் பூவே கறி**

என்று பாடினார்.

***இதன் பொருள் :*** கேட்ட புலவர் அயர்ந்து போனார். நான்முகன் சிவன் திருமால் எனப்படும் மும்மூர்த்திகளுக்குப் பயறும் பிள்ளையும் வெண்ணெயும் கறிகளாம். செந்நெல் நஞ்சு பூமி ஆகிய மூன்றும் உணவுகளாம். தண்டம் மான்குட்டி சக்கரம் ஆகியன ஆயுதங்களாம். முப்புரி நூல் பாம்பு கௌத்துவ மணி ஆகியன அணிகளாம்; அன்னம் வெள்விடை கருடன் ஆகிய மூன்றும் வாகனங்களாம். தாமரை மலரும் கையிலை மலை பாற்கடல் ஆகியன மூன்றும் வசிக்கும் இடங்களாம்.

**எழுத்தாணி சூரிக்கத்தி**

எழுத்தாணி சூரிக்கத்தி என்று தொடங்கி சூரிக்கத்தி என்று முடிக்க வேண்டும் அப்படிப் பாட முடியுமா? உம்மால்? என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் பாடிய பாடல் இது.

**எழுத்தாணியிது பெண்ணிதனை முனி காதில்**
**வழுத்தா ரணக்குகனை வாதுக் - கழைத்தும்**
**மாரன்கை வில்மான்முன் காத்ததுவும் நன்றாகும்**
**தீரமுள்ள சூரிக் கத்தி**

***இதன் பொருள் :*** எழுத்துக்களுள் ஆண் எழுத்து இதுவென்றும் பெண் எழுத்து இது என்றும் தமிழுக்கு அன்னை போன்ற அகத்தியமுனி காதில் உபதேசித்து அருளிய வேதநாயகனான முருகப் பெருமானை வாதுக்கழைத்ததும் மன் மதன் கையில் வில்லாக விளங்குவதும் திருமால் முன்னாளில் தோன்றிக் காத்ததுவும் வீரமுள்ள சூரபதுமன் கரும்பு கசேந்திரன் என மூன்றாகும். சூர் - இக்கு - அத்தி என்றவற்றை ஒன்று சேர்த்தால் சூரிக்கத்தி என வரும். சூர் - சூரன் இக்கு - கரும்பு அத்தி - யானை

*(தொடரும்...)*

# பட்டினத்தார் பைந்தமிழ் - 21

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பதினோராம் திருமுறையில் திருஏகம்பமுடையார் திருவந்தாதி என நூறு பாடல்கள் பாடிய பனுவலைப் போலத் திருமுறையில் சேர்க்கப் படாததாகப் பாடியதே பட்டினத்தாரின் திருவேகம்பமாலை எனும் நாற்பத்தொரு பாடல்கள் கொண்ட பனுவலாகும்.

காவிரிப் பூம்பட்டினத்தில் செல்வச் செழிப்புடன் மன்னர் பின்னோராய் வாழ்ந்த நகரத்தார்கள் கடல்கோள் என்னும் ஆழிப் பேரலை அச்சத்தால் இடம் பெயர்ந்து வாழத் தலைப்பட்ட போது காஞ்சியம் பதியை அடைக்கலமாக அடைந்தனர். பின்னரே பாண்டிய நாட்டு வடக்கு எல்லையைத் தேர்ந்தெடுத்து நிரந்தரமாய் வழி வழியாக வாழத் தலைப்பட்டனர் என்பது நகரத்தார் வரலாற்றின் அடிப்படை உண்மையாகும்.

நகரத்தார்களுக்குத் தொடக்க காலத்தில் சோழநாடும் பல்லவ நாடும் வாழ்தற்குறிய இடமாக இருந்த உண்மையைக் கூறாமல் கூறிப் பதிவு செய்வார் போலவே பட்டினத்தார் இவ்விரு நாடுகளுக்கான இலக்கியங்களைப் பாடினார் எனத் தெரிகிறது.

இந்நிலையில் திரு ஏகம்பமுடையார் திரு வந்தாதி அகப்பொருள் சாயலில் நாயக நாயகி உணர்வுடன் பாடினாலும் திருஏகம்ப மாலையைக் காஞ்சிபுரத்தில் திருக்கோயில் கொண்டிருக்கும் திருஏகம்ப நாயகரைப் பொதுவாகப் பாடித் துதிப்பதாகப் பட்டினத்தார் பாடினார்.

இந்த ஏகம்ப மாலை நூல் பாடி முடியும் போது திருஏகம்ப விருத்தம் என்ற தலைப்பில் ஒரே ஒரு பாடல் மட்டும் உள்ளது. அது பலரானும் அறியப் பட்ட நிலையாமைத் தத்துவத்தை உணர்த்தும் பாடலாகும்.

*அன்னை எத்தனை எத்தனை அன்னையோ?*
*அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ?*
*பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ!*
*பின்னை எத்தனை எத்தனை பிள்ளையோ!*

*முன்னை எத்தனை எத்தனை சென்மமோ!*
*மூடனாய் அடியேனும் அறிந்திலேன்*
*இன்னம் எத்தனை எத்தனை சென்மமோ!*
*என்செய்வேன் கச்சி ஏகம்ப நாதனே!*

இப்பாடல், பிறவிப் பெருங்கடல் சுழற்சியில் ஆன்மா படும் அனுபவத்தைக் கூறுவதாக உள்ளது. பிறந்தோர். உறுவது பெருகிய துன்பம் என்பது மணிமேகலைக் காப்பியங் கூறும் ஓர் அறம். இந்தச் சுழற்சியால் பிறப்பிறப்புகள் மாறிமாறி அமைய, வாழ்க்கையும் மாறிமாறி அமையும் போது ஏற்படும் அனுபவத்தினின்றும் கரையேறக் கச்சியம் பதிக் கடவுளின் திருத்தாளைச் சரணடைவார் போலப் பட்டினத்தார் என் செய்வேன் என்றார்.

*அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது. (8)*

என்ற குறள் வழி உயிர்கள் உடலோடு கூடிவாழும் காலத்துத்தாம் எடுத்த பிறவி பற்றி அறிய மாட்டா நிலையில் ஞானம் கைவரப் பெற்றதும் பிறவா நிலை வேண்டுவது இயல்பாதலின் நிட்காமிய நிலையில் கச்சிஏகம்ப நாதனே என் செய்வேன்! என ஏங்கித் துதித்தார்.

ஏகம்ப மாலையின் தொடக்கத்தில் இல்லறத் தாரினும் துறவறத்தார் சிறந்தவர் என்னும் அத்துறவும் அகத்துறவாக யான் எனது என்ற பற்று நீங்கியதாக இருப்பின் சிறந்தது என்றும் இங்ஙனம் எல்லாப் பற்றொழிந்த நிலையில் ஏகம்பரே! உன்பற்றுடன் இருப்பதே சாலச் சிறப்பாம் என்றார் பட்டினத்தார்.

மனைவி மக்களுடன் ஏகபோகமாக வாழ்தல் இம்மைக்குரிய பலனை நல்குவதாக அமையினும் அவ்வாழ்வில் அமையும் அவை எல்லாம் தோன்றி மறையும் மயக்கத்தைத் தருவனவாகவே உள்ளதால் நல்லாரோடு கூடிய தொடர்பும் சிவபூசை செய்யும் பண்பும் தமக்கு வேண்டும் என வேண்டுகிறார். அடிகள் நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமும் அலாது வேறு நிலையுளதோ என்பது அடிகளின் வாக்காகும், மேலும் அவர் கயிற்றில் ஆடும் பாவையானது (பொம்மை) கயிறு அறுந்து பட்டால் கீழே வீழ்தல் போல இறைவனே! உன் திருவருள் அல்லாது பிரிந்து விட்டால் நான் பிழைக்க முடியுமோ?

என்றும் ஏங்குகிறார் அடிகள். இதனால் ஆன்மாக்களுக்கு அவனன்றி வேறில்லை என்ற சித்தாந்த உண்மையை நினைவூட்டித் தான். தவநெறி நில்லாதவனாயினும் பூமியில் பிறந்துவிட்ட பாவியேனைத் தாங்குதல் வேண்டும் என விண்ணப்பிக்கின்றார்.

பரமாத்மா நிலைக்கு உயர்ந்துவிட்ட பட்டினத்தார், தம்மைத்தாமே தாழ்த்திக் கொண்டு எளிமையாகக் கூறுவதெல்லாம் உலக ஜீவாத் மாக்கள் உய்யும் பொருட்டு ஆகுமே யன்றித்தம் பொருட்டன்று என்பது கருத்து. முற்றுந் துறந்தவர்க்குச் சோற்றுக் கவலையோ, செல்வக் கவலையோ வாழ நினைக்கும் சிற்றின்ப உணர்வோ கிஞ்சித்தும் இல்லைதான் என்றாலும் உலகியலார்படும் துன்பக் கவலையைத் தம்மீது ஏறிட்டுக் கொண்டு அவற்றை நீக்க வேண்டும் எனப் பரோபகார உணர்விலேயே பாடல்களைப் பாடிச் செல்கிறார்.

*அன்ன விசாரம் அதுவே*
*விசாரம் அதுஒழிந்தால்*
*சொன்ன விசாரம் தொலையா*
*விசாரம்நற் றோகையரைப்*
*பன்ன விசாரம் பலகால்*
*விசாரம்இப் பாவிநெஞ்சுக்கு*
*என்ன விசாரம் வைத்தாய்*
*இறைவாகச்சி ஏகம்பனே!*

இத்தகு கவலைக்குக் கொன்கலமாக வாழும் மனிதப் பிறப்பிறப்பிற் கிடையில் தோன்றும் செல்வத்தைக் கொண்டு வந்ததும் கொண்டு போவதும் இல்லை என்பதால் பெற்ற பெருவளம் இறைவனால் வந்தது என்று எண்ணி ஈத்துவக்கும் வாழ்வை வாழாமல் மனிதர்கள் கெடுகின்றார் களே என்று ஏங்கித் தவிக்கிறார் பட்டினத்தார்.

*பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை*
*பிறந்து மண்மேல்*
*இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை*
*யிடை நடுவில்*
*குறிக்கும்இச் செல்வம் சிவன்தந்த தென்று*
*கொடுக்கறியாது*

*இறக்கும் குலாமருக்கு என் சொல்லுவேன்*
*கஞ்சி ஏகம்பனே!*

இங்ஙனம் பிறர்பொருட்டு ஏறிட்டு ஏங்கித் தவிப்பவர், மக்கள் செய்யும் பிழைகளைப் பட்டியலிட்டுக்காட்டியும் வருந்துகிறார்.

*கல்லாப் பிழையும் கருதாப் பிழையும்*
*கசிந் துருகி*
*நில்லாப் பிழையும் நிலையாப்பிழையும்*
*நின்ஐந் தெழுத்தைச்*
*சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும்*
*தொழாப் பிழையும்*
*எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்க்கச்சி*
*தகம்பனே!*

இந்த ஒரு பாடலின் விரிவாகவே மற்றைய பாடல்களும் உள்ளன எனலாம். அந்த அளவிற்கு அகிலத்துப் பிழைகளின் மலிவைக் சுட்டிக் காட்டுவதால் உலகின் மாய வலையில் வீழ்ந்து இடருறாதவாறு காக்கத் தாயுள்ளத்தோடு வேண்டுகிறார் பட்டினத்தார் என்பது கருத்து. இந்த நல்ல வேண்டுதலைக் கீழ்க்கண்ட பாடல் உருக்கமாகக் கூறுகிறது.

*ஊரும் சதமல்ல உற்றார்*
*சதமல்ல வுற்றுப் பெற்ற*
*பேரும் சதமல்ல பெண்டிர்*
*சதமல்ல பிள்ளை களும்*
*சீரும் சதமல்ல செல்வமும் சதமல்ல*
*தேசத்திலே*
*யாரும் சதமல்ல நின்தாள் சதம்,*
*கச்சி ஏகம்பனே!*

இப்பாடல் திருவடியன்றி வேறு சதமான பற்றுக் கோடில்லை என்கிறது.

இப்படியாகக் கச்சியேகம் பனையே சதமாக எண்ணி வாழும் வாழ்க்கையில் பட்டினத்தார் பேறு பெற்றதாகக் கூறுகையில், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலச் சேட்டை நீங்கி, ஆன்மாவைப் பற்றியுள்ள தாமச, இராசச, சத்துவம் என்னும்

முக்குணவசப் படாமல் அகன்று, பேராசையாம் சகல அவத்தைகளினின்றும் ஒதுங்கி, உடனி ருந்தே வஞ்சிக்கும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் கடந்து நிற்கும் நிலையில் தோன்றும் சிவானந்தத் தோற்றத்தில் சிவமாய் ஐக்கியமாதலைப் பெரும் பேறு பெற்றதாகக் கூறுகிறார்.

இபப்பேறுகள் அடைந்ததன் சுருக்கத்தை மற்றொரு பாடலில் நிலையில்லாதவைகளாக எல்லாம் இருந்தும் என்ன பயன்? என வினவி, திருவருள் ஒன்றே நிலையானது என்று உறுதியாகக் கூறும் போது,

***ஊரிருந் தென்ன! நல்லோரிருந் தென்? உபகாரம் - உள்ள***
***பேரிருந்தென்? பெற்ற தாய் இருந்தென்? மடப்பெண்***
***சீரிருந் தென்ன? சிறப்பிருந் தென்ன? இத்தேயத்தில்***
***ஏரிருந்தென்? வல்லவா! இறைவா! கச்சிஏகம்பனே!***

ஆக இப்படி யெல்லாம் மனமானது அலைமோதி ஒரு நிலைப்படாமல் திரிந்தாலும் திருவருள் ஒன்றே நிலைபேறுடையது என எண்ணித் துணியுங்கால் எல்லாம் சிவன் செயலே என்பர்கச்சி ஏகம்பனே! என்ற தெளிவை ஆன்மா பெறும் போது தீங்கு செய்தேன் அது தீர்க என்றே நின்றேன் நின்சந்நிதி! நீ பொறுப்பாய் எனச் சரணாதியால் ஆன்மா உய்தியடையும் என்பது பட்டினத்தாரின் கருத்தாகக் கச்சி ஏகம்ப மாலையைப் படிப்பதன் பலனாக உணர முடிகிறது!

இங்ஙனம் கச்சி ஏகம்பனைத்து தித்து உலக உயிர்கள் உய்யப் பாடியதற்குப் பின்னர், பட்டினத்தார் திருத்தலப் பயணமாகப் பல திருக்கோயிற்குச் சென்று பாடுவதை அடுத்துக் காண்போமாக!

***(தொடரும்...)***



## வாதவூரரும் வள்ளலாரும்

(பேராசிரியர் டி.ஆர். குருமூர்த்தி)

(ஆட்சிக்குழு உறுப்பினர், அழகப்பா பல்கலைக் கழகம்)

பக்திநெறி என்பது மனிதனது வாழ்வின் அடிப்படை நெறியாகும். இறையுணர்வு என்பது அனைத்து மதத்தவருக்குரிய, மனிதகுலம் அனைத்துக்குமாகிய பொது நெறியாகவே கருதப்படுகின்றது. வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல என்பது வள்ளுவரின் வேதம்; கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன் நற்றாள் தொழார் எனின் என்பதும் வள்ளுவரின் வாக்கு. இறைவனது திருவடிகளைத் தொழுது வணங்கும் அளவிற்குப் பக்திமார்க்க நெறியில் படித்தவன் நிற்க வேண்டும். அப்பொழுதுதான் படித்ததற்கான பயன்கிட்டும். படித்தவர் என்று மற்றவர்களால் போற்றப்படுவான். வள்ளலார் சோதி வழிபாட்டை வலியுறுத்துகின்றார். வழிபாடு என்பதனை வள்ளலாரின் அருட்பாக்களில் காண்கிறோம்; அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை என்று மனதாரச் சொல்லிவருகிறோம். மாணிக்கவாசகரின் திருவாசகம் தெய்வ உருவ வழிபாட்டினை விளக்குகின்றது. தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி எனச் சொல்லி இறைவனை வழிபாடு செய்ய நம்மை அழைத்துச் செல்வது திருவாசகமாகும்.

**ஆடக மதுரை அரசே போற்றி**
**கூடல் இலங்கு குருமணி போற்றி**
**ஆரூர் அமர்ந்த அரசே போற்றி**
**சீரார் திருவை யாறா போற்றி**
**அண்ணாமலை எம்அண்ணா போற்றி**
**ஏகம்பத்துறை எந்தாய் போற்றி**
**பராய்த்துறை மேவிய பரனே போற்றி**
**சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி**
**நஞ்சே அமுதாய் நயந்தாய் போற்றி**
**காவாய் கனகக் குன்றே போற்றி**
**கயிலை மலையானே போற்றி போற்றி**

திருவாசகத்தில் போற்றித் திருஅகவல் பதிகங்களில் மேற்கூறிய வரிகள்

அமைந்துள்ளன. அரசே, குருமணி, அண்ணா, எந்தாய், பரனே, கனகக் குன்றே என இறைவனை அன்பாக நினைத்துப் போற்றிப் பாடுகிறார் மாணிக்கவாசகர். சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம் ஒருவனே என்றும் திருவாசகம் சொல்கின்றது. வீடுதந்து அருளு போற்றி நின் மெய்யர் மெய்யனே என்பது வலியுறுத்தப் படுகின்றது. இறைவழிபாடு வாழ்வில் நெறியாகச் சொல்லப்படுகின்றது. எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவதும். அனைத்து உயிர்களையும் சமமாகப் பார்ப்பதும் சீவகாருண்யம் ஆகும். சீவகாருண்யம் என்கிற நெறியை வள்ளலார் பெரிதும் வலியுறுத்துகிறார். சத்திய தருமசாலை, சத்திய ஞானசபை ஆகிய இரண்டின் நோக்கம் சமரசசுத்த சன்மார்க்க நெறிக்கு மனிதகுலத்தை அழைத்துச் செல்வதாகும். தருமசாலை பசிப்பிணி போக்குகின்றது. ஞானசபை மனஇருளைப் போக்குகின்றது. அகஇருள் நீங்கி எனது என்கிற அஞ்ஞானம் கரையும் போது, சீவகாருண்யம் தானாகவே தோன்றும். சோதி வழிபாடு, உருவ வழிபாடு என்கிற தடத்தைத் தவிர இறைவழிபாடு குறித்த பார்வையும், பாடல்களும் வள்ளலாருக்கும் மாணிக்கவாசகருக்கும் ஒன்று போலவே தென்படுகின்றன.

இராமலிங்க அடிகளார் தமது திருவருட்பாவில் ஐந்தாம் திருமுறையில் அன்புமாலை என்கிற தலைப்பில் கீழ்க்காணும் பாடலை நமக்கு அளித்துள்ளார்.

அன்புமாலை (3053) ஐந்தாம் திருமுறை

*ஏதும் அறியாத இருளில் இருந்த சிறியேனை*
*எடுத்து விடுத்து அறிவு சிறிது எய்திடவும் புரிந்து*
*ஓதுமறை முதற்கலைகள் ஓதாமல் உணர*
*உணர்வில் இருந்து உணர்த்தி அருள் உண்மை நிலை காட்டித்*
*சாதிகுலம் பிறப்பு எனும் சுழிப்பட்டுத் தடுமாறும்*
*ஆதம்இலி நாயேனை அல்லல் அறுத்து ஆட்கொண்டு*

எனது உருவம் முழுமையாகத் தெரியாத காலத்திலேயே என்னுள் புகுந்து எனது உள்ளத்தில் குடி இருந்து வாழ்வியல் நெறிகளை எமக்களித்து, தமது கருணையினால் என்னை இறைவன் ஆட்கொண்டான் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார்.

உருத்தெரியாக் காலத்தே என்பதை, கருவாக இருக்கும் போதே இறைவன் புகுந்து கொண்டான் எனப் புரிந்து கொள்ளலாம். அறநெறிகளைக் கற்று உணராத சிற்றறிவில் கிடந்து நாயினும் கீழாய் இருந்த என்னை, அனைத்திலும் தேர்ச்சி பெற்றவனாக அனைத்திலும் வனப்புடன் இருக்கும் வண்ணம் என்னை இறைவன் ஆளாக்கினான். சாதி, குலம், பிறப்பு என்னும் துன்பங்களில் ஆட்பட்டுத் துணை இல்லாது நின்ற எனக்கு அனைத்துத் துன்பங்களிலிருந்தும் விடுவித்து இறைவன் என்னை ஆட்கொண்டான் என இறையருளின் பெருமையினை மாணிக்கவாசகர் எடுத்துரைக்கின்றார்; மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி மறுமையோடு இம்மையும் கெடுத்த பொருளனே என மாணிக்கவாசகர் இயம்புகின்றார். நமது மனம் தீயநெறிகளிலோ, சமயநெறிகளிலோ ஆட்படக் கூடாது என வள்ளலார் வலியுறுத்துகின்றார். சாதி மற்றும் குலம் சார்ந்த எண்ணங்கள் துன்பங்களைத் தரும் என்பதை மாணிக்கவாசகர் வரிகளிலிருந்து உணர்கிறோம். எனவே சாதி, குலம், சார்ந்த எண்ணங்களிலிருந்து விலகி இருக்க வேண்டும் என்பதை மாணிக்கவாசகர் வலியுறுத்துவதாக உணர்கிறோம். இறையருள் மனிதனைச் செதுக்கி செம்மைப்படுத்தித் தெய்வீக அறவழியில் கொண்டு செல்லும் என்பதை வள்ளலாரும் மாணிக்கவாசகரும் உணர்த்துகின்றார்கள்.

உலக வாழ்வில் சிலர் இறைவனைத் தேடிச் சென்று கொண்டிருப்பர். இறையருளினை நாடி உடலை வருத்தித் தவம் இருப்பர். காடு, மலை எனச் சுற்றி வருவர், சிலரை இறைவனே தேடி வருவான்; இது ஓர் விந்தை இப்படிப்பட்ட விந்தை வள்ளலார் வாழ்விலும் மாணிக்கவாசகர் வாழ்விலும் நடந்ததாகப் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

*தீதுநெறி சமயநெறி செல்வதனைத் தவிர்த்துத்*
*திருவருள் மெய்ப்பொது நெறியில் செலுத்தியும் நான் மருளும்*
*போது மயங்கேல் மகனே என்று மயக்கெலாம்*
*போக்கி எனக்குள் இருந்த புனித பரம்பொருளே*

இராமலிங்க அடிகளார் இறைவனைப் பரம்பொருளாகப் பார்க்கின்றார். நான் ஏதும் அறிந்திராமல் அறியாமை என்கிற இருளில் வாழ்ந்திருந்தேன். என்னை இறைவன் ஆட்கொண்டு எனை

எடுத்துக்கொண்டு நான் அறிவு சிறிது பெற்றிட அருள் புரிந்தான். நான் அனைத்து மறைகளையும் (வேதங்களையும்) ஆயகலைகள் அனைத்தையும் கற்பதற்கும் முழுமையாகத் தெரிந்து கொள்வதற்கும் வருடங்கள் பல ஆகும். பல வருடங்கள் நான் காத்திராமல் அனைத்து மறைகளையும் கலைகளையும் நான் தெரிந்துகொள்ள இறைவன் எனது உணர்வில் அமர்ந்து அத்தனையும் எனக்கு உணர்த்தி இறையருள் மற்றும் வாழ்வின் உண்மை நிலையை இறைவன் காட்டினான். தீயநெறிகள் மற்றும் சமயநெறிகளில் நான் செல்லாது அவற்றைத் தவிர்க்க இறைவன் அருள் செய்தான். திருவருளாம் சமரசசுத்த சன்மார்க்க நெறியில் என்னைச் செலுத்தி நான் மயங்கும் போது (சோர்வுறும் போது) மயங்கேல் மகனே என்று என் மயக்கமெல்லாம் போக்கி எனக்குள் பரம்பொருளான இறைவன் இருந்து கொண்டு எனக்கு அருள் செய்தான் என இராமலிங்க அடிகளார் தம்முள் இருந்த இறைவனின் பெருமையினை இப்பாடலில் கூறியுள்ளார்.

இதே கருத்தினை வலியுறுத்தும் வண்ணம் மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தில் கீழ்க்காணும் பாடல் வரிகளை நமக்குத் தந்துள்ளார்.

*உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்து என்உளம் மன்னிக்*
*கருத்து இருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட*
*கல்லாத புல் அறிவிற் கடைப்பட்ட நாயேனை*
*வல்லாளனாய் வந்து வனப்பெய்தி இருக்கும் வண்ணம்*

ஐந்தாம் திருமுறை அதிசய மாலை

*எற்றே ஈதுஅதிசயம் ஈது அதிசயம் என்இசைப்பேன்*
*இச்சையெல்லாம் விடுத்து வனத்திடத்தும் மலையிடத்தும்*
*உற்றே மெய்த்தவம் புரிவார் உன்னிவிழித்திருப்ப*
*உலக விடயங்களையே விலகவிட மாட்டேன்*
*கற்றேதும் அறியகிலேன் கடையரினும் கடையேன்*
*கருணையிலாக் கல்மனத்துக் கள்வன் எனைக் கருதிச்*
*சற்றேயும் அன்று மிகப் பெரிதும் எனக்குஇங்கு அளித்த என்*
*தனித்த சிவகாமவல்லிக்கு இனித்த நடத்தவனே*

தமது ஆசைகளையெல்லாம் மறந்துவிட்டு காடுகளிலும் மலைகளிலும் தவம் புரிந்து இறையருளுக்காகப் பலர் விழித்துக்

கொண்டிருக்கிறார்கள். அவர்களையெல்லாம் விடுத்து இறைவன் என்னை ஆட்கொண்டு அருள் பாலித்தான். இது அதிசயம் எவ்வாறு சொல்வேன் உலகில் சாதாரண மனிதன் கொண்டிருக்கின்ற ஆசை, பாசங்களிலிருந்து நான் விலகாது இருக்கிறேன். முழுமையாக எதையும் கற்று அறிகிலேன். உலகில் கடைசியாக இருப்பவர்களில் நான் கடைசியாக இருக்கிறேன். நெஞ்சில் கருணையே இல்லாத கள்மனத்துக் கள்வன். இத்தகு குறைபாடு கொண்ட எனக்கு இறையருள் தந்த சிவகாமவல்லிக்கு இனித்த நடத்தவனே என இறைவனைப் பாடுகிறார் வள்ளலார். இதே கருத்தினை உணர்த்தும் மாணிக்கவாசகரின் வரிகளைக் கீழே காணலாம்.

அருபோக சுத்தி

*உலவாக்காலம் தவம்எய்தி*
*உறுப்பும் வெறுத்து இங்கு உனைக் காண்பேன்*
*பலமாமுனிவர் நனிவாடப்*
*பாவியேனைப் பணிகொண்டாய்*
*மலமாக்குரம்பை இதுமாய்க்க*
*மாட்டேன் மணியே உனைக் காண்பான்*
*அலவா நிற்கும் அன்புஇலேன்*
*என்கொண்டு எழுகேன் எம்மானே*

தன்னை மறந்து தமது உடல் உறுப்புகள் அனைத்தையும் மறந்து இறைவா உன்னைக் காணப் பல பெரிய முனிவர்கள் பல ஆண்டுகள் தவம் இருந்து கொண்டிருக்கின்றார்கள். அவர்களையெல்லாம் விடுத்து இறைவா பாவியான என்னை ஆட்கொண்டாயே என மாணிக்கவாசகர் தமது நிலையை விளக்குகின்றார். மலம் சேர் ஒன்பது வாயிற்குடில் இந்த உடம்பு. இந்த உடம்பினை நான் மற்ற மாமுனிவர்கள் போல மறக்கமாட்டேன். தவத்தில் மாய்க்கமாட்டேன். நான் உன்மீது அன்பு கொண்டவனும் அல்லன். எதைத் துணையாகக் கொண்டு எழுவேன் இறைவா எனப் பாடுகிறார் மாணிக்கவாசகர். இறைவன் மாணிக்கவாசகரைக் தேடி வந்து ஆட்கொண்டதை இப்பாடலில் உணர்கிறோம். கீழ்க்காணும் பாடல் வரிகளும் மாணிக்கவாசகரின் ஆச்சரியத்தை வெளிப்படுத்துகின்றன.

*கேட்டாரும் அறியாதான் கேடுஒன்றும் இல்லான்*
*கிளைஇலான் கேளாதே எல்லாம் கேட்டான்*
*நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே*
*நாயினுக்குத் தவிசு இட்டு நாயினேற்கே*
*காட்டாதன எல்லாம் காட்டிப் பின்னும்*
*கேளாதன எல்லாம் கேட்பித்து என்னை*
*மீட்டேயும் பிறவாமல் காத்து ஆட்கொண்டான்*
*எம்பெருமான் செய்திட்ட விச்சைதானே*
*முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே.*

தன்னை இறைவனிடம் சேர்த்தும், இறைவனைத் தன்னுள் சேர்த்துக் கொண்டதையும் வள்ளலாரும், மாணிக்கவாசகரும் பாடல் வரிகளை நமக்குத் தந்துள்ளனர்.

அருள்விளக்க மாலை

*என்உயிரும் உன்உடலும் என்பொருளும் யானே*
*இசைந்து கொடுத்திட வாங்கி இட்டதன் பின் மகிழ்ந்தே*
*தன் உயிரும் தன்உடலும் என்பொருளும் எனக்கே*
*தந்து கலந்தெனைப் புணர்ந்த தனித்த பெருஞ்சுடரே*

எனது உயிர், உடல், பொருள் அனைத்தும் நானே விரும்பி இறைவனிடம் கொடுத்தேன். இறைவனும் பெற்றுக் கொண்டார். பெற்ற பிறகு, தனது உயிர், உடல், பொருட்கள் அனைத்தையும் மகிழ்ச்சியாக எனக்குத் தந்து என்னுள் தனித்த பெருஞ்சுடராக இறைவன் கலந்து நின்றான் என வள்ளலார் பாடியுள்ளார். மாணிக்கவாசகர் திருவாசகமும் இக்கருத்தினை வலியுறுத்துகின்றது.

*தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்*
*அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்*
*யாது நீ பெற்றது ஒன்று என்பால்*

*சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்*
*திருப்பெருந் துறைஉறை சிவனே*
*எந்தையே ஈசா உடல் இடம் கொண்டாய்*
*யானிதற்கு இலன்ஓர் கைமாறே*

*அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய் என்னைஆட் கொண்டபோதே கொண்டிலையோ*
*இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே.*

இறைவா என்னை ஆட்கொண்ட போதே எனது உயிர், உடல் உடைமைகள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டாய், எட்டுத் தோள்கள், மூன்று கண்கள் கொண்ட எம்பெருமானே இன்று எனக்கு எவ்வித இடையூறும் இல்லை. நீ எனக்கு நல்லதையே செய்வாய். எனக்கு இடையூறு தரும் எப்பிழையினையும் நீ செய்யமாட்டாய் என்பதற்கு நானே உருவாய் நிற்கிறேன் என மாணிக்கவாசகர் தாம் இறைவனால் ஆட் கொள்ளப்பட்ட நிலையினை விளக்குகின்றார்.

திருவாசகமும் திருவருட்பாவும் ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்ஜோதியின் தெய்வீக அருள் கிடைக்க நமக்கு உதவும் தெய்வீக நூல்களாகும். இவ்விரு நூல்களில் அருளப்பட்டுள்ள தெய்வீகப் பாடல்கள் மனிதனுக்கு இறைவனது திருவடிப்பேறு பெறப் பெரிதும் உதவும் என்பது நிதர்சனமான உண்மையாகும். நமது வாழ்வில் பொய்களை நீக்கி உண்மைதனை நிலை நிறுத்தும்.

## வள்ளலார் அமைக்கும் கொள்கைக் கூட்டணி

(பேராசிரியர் மு.பழனி இராகுலதாசன்)

வள்ளல் பெருமான் வழங்கியுள்ள அருட்பா ஆறு திருமுறைகளிலும் பக்தி என்னும் பெருவெள்ளம் பாய்ந்து பாய்ந்து ஓடுகிறது. தமிழ்க் கவிதை வரலாற்றில் பக்தி, வழிபாடு, சமுதாயச் சிந்தனை, வாழ்வியல் கோட்பாடு என்று தனி முத்திரை பதித்தவர் நம்முடைய வள்ளல் பெருமான் ஆவார். வள்ளல் பெருமான் என்ன சொன்னார்? என்ற கருப்பொருள் ஆராய்ச்சி மிக விரிவாகவே தமிழகத்தில்

நடைபெற்றிருக்கிறது. ஆனால் எப்படியெல்லாம் சொன்னார்? என்பதான கலைவடிவ, உருவ ஆராய்ச்சி தமிழகத்தில் போதுமான அளவில் நிகழ்த்தப் பெறவில்லை என்றே சொல்லலாம். ஆறு திருமுறைகளிலும் அவர் மேற்கொண்டிருக்கிற சொல்லுதல் உத்தி மிகவும் நயமானவை; நளினமானவை. ஆறாம் திருமுறை - தனித்திருமாலை என்ற பகுதியில் உண்மை இன்பம் என்ற தலைப்பில் வள்ளல் பெருமான் பாடியுள்ள ஒரு நேரிசை வெண்பாவின் கவித்துவச் சிறப்புப் பற்றி இக்கட்டுரையில் சிறிது காண்போம்.

திருவாசகத்தில் இரண்டே இரண்டு பாத்திரங்கள்; ஒன்று இறைவன்; இன்னொன்று மாணிக்கவாசகர்; நூல் முழுவதிலும் இந்த இரண்டு பாத்திரங்களுக்கு இடையிலான அனுபவங்களே பரந்து விரிந்துகிடக்கக் காண்கிறோம். நாடறிந்த இன்னொரு உதாரணம் மகாகவி தாகூர்படைத்த கீதாஞ்சலி; கீதாஞ்சலி இலக்கியம் முழுவதிலும் தாகூரும் இறைவனும் ஆன இரண்டே இரண்டு பாத்திரங்கள் பேசுகின்ற பேச்சுக்களே அமைந்திருக்கக் காணலாம்; அதுபோலவே மகாகவி பாரதியின் கண்ணன் பாட்டு வரிசையும்; பாரதியும் கண்ணனும் என்கிற இருபாத்திரப் படைப்பு எனப் புரிந்து கொள்ளலாம். இவ்வாறே அருட்பாவில் இறைவன் - இராமலிங்கர் என்கிற இரண்டு பாத்திரங்களின் உரையாடல்களே அமைகின்றன.

ஆறாம் திருமுறை - தனித்திருமாலை என்ற பகுதியில், உண்மை இன்பம் என்ற தலைப்பில் அமைந்த, பின்வரும் நேரிசை வெண்பா நமது கவனத்துக்கு உரியதாகின்றது.

*உன்னைவிடமாட்டேன் நான், உன் ஆணை, எம்பெருமான்*
*என்னை விடமாட்டாய், இருவருமாய் - மன்னி என்றும்*
*வண்மைஎலாம் வல்ல வாய்மை அருளால், உலகுக்கு*
*உண்மை இன்பம் செய்தும் உவந்து.*

இறைவ நாம் இரண்டுபேரும் கூட்டாகச் சேர்ந்து உலகத்தார்க்கு உண்மை இன்பம் உவந்து செய்வோம் என்பது இந்த வெண்பாவின் திரண்டகருத்து.

உலகத்தார்க்கு ஏதேனும் நன்மை செய்யலாம் என்று கருதிய வள்ளலார், தனது கருத்தை நிறைவேற்றிக்கொள்ள ஒரு கூட்டணி அமைத்துக் கொள்ள விரும்புகிறார். யாருடன் அமைத்தால் அது

மிகவும் பலமான கூட்டணியாக இருக்கும்? என்று சிந்தித்தார் போலும்! காரியம் செம்மையாக நிறைவேற வேண்டும்; எனவே இறைவனுடனேயே கூடு;டணி அமைத்துக் கொள்ள வேண்டுமெனத் திட்டமிட்டார். பேச்சுவார்த்தை தொடங்குகிறது; நமது நோக்கம் தெளிவானது; உலகத்தார்க்கு உண்மை இன்பம் எது என்று காட்டி, அவர்களுக்குச் செய்து தரவேண்டும்; அதுவும் எப்படி? நாம் இருவரும் உவந்து செய்ய வேண்டும்! சரிதானே? என்று பேச்சு தொடங்கியது. நோக்கம் தெளிவாக இருக்கிறது; அவர், இவர் என்று பிசிறுகள் இல்லாத, இருவர் மட்டுமே இடம்பெறும் வலிமையான கூட்டணி.

இறைவனுடனான கூட்டணி என்பது உறுதியாகி விட்டது; கூட்டணியின் கொள்கை, நோக்கம் எல்லாம் தெளிவு பெற அமைந்துவிட்டது. என்றாலும் இராமலிங்கருக்கு ஓர் ஐயம்! கூட்டணிக்காரர் எதையாவது சொல்லி, அதனால் கூட்டணி உடைந்து போனால் என்ன செய்வது? கூட்டணியை உறுதிப்படுத்திக் கொள்ள, இருவரையும் ஒருசேரக் கட்டுப்படுத்தக் கூடிய வாசகங்களைத் தெளிவாக அமைத்து அறிவிக்கிறார். நமது கூட்டணி கொள்கைக் கூட்டணி; மக்களுக்கு உண்மை இன்பம் செய்வதற்கான கூட்டணி; எனவே கூட்டணிக்கான வாசகங்களை, இருவரையும் ஏக காலத்தில் கட்டுப்படுத்தும் வாசகங்களாக அமைத்துக் கொள்ள வேண்டும், சரிதானே! என்ற பீடிகையுடன் இராமலிங்கர் கூட்டணி ஒப்பந்த வாசகங்களைப் பாடலில் அமைக்கின்றார். உன்னை நான் விட மாட்டேன்; நீயும் என்னை விட்டுவிடக் கூடாது; பரம்பொருளாகிய உன்மீது சத்தியம்; இந்த ஒப்பந்தம் இருவரையும் ஒருசேரக் கட்டுப்படுத்தக் கூடியது... இறைவ, இது உன்மீது ஆணை! என்று அமைத்துக் கொள்கிறார்; மிகவும் தெளிவாக அமைத்துக் கொள்ளப்பட்ட கூட்டணி; கொள்கைக் கூட்டணி; கூட்டணி கருதி, அதன் வெற்றி கருதி, வள்ளலார் அமைத்துக் கொண்டுள்ள வாசகங்கள் மிகவும் இறுக்கமானவை; இறைவன் நினைத்தாலும் கூட்டணியை உடைக்க முடியாது; இது உன் ஆணை என்று பொறுப்பு முழுவதையும் இறைவனின் பக்கம் மிக எச்சரிக்கையாகச் செலுத்திவிடுகிறார்; உன்னை நான் விடமாட்டேன்; இதுவும் உன் ஆணை; நீயும் என்னை விடமாட்டாய்; இதுவும் உன் ஆணைதான்; இவ்வாறு பொருள்படுமாறு சொல்லமைப்பு விளங்குவது கவனிக்கத்தக்கது. உன் ஆணை என்பதை முன்னும் கூட்டுக; பின்னும் கூட்டுக; இவ்வாறு கூட்டிப்

பார்த்தால் வள்ளலாரின் பாட்டுத்திறம் நன்கு புலப்படும். இந்த வேளையில் இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றில் இடம் பெறும் வட்டமேசை மாநாடுகள் பற்றிச் சிந்திக்கலாம். "ROUND TABLE" என்பதற்கு அதாவது வட்டமேசை மாநாடு என்பதற்குப் பொருள் சரிசமமுறை இணக்கப் பேச்சுக்கள் நடைபெறுவதற்குரிய கூட்டுக்குழு என்று அகாரதிகள் விளக்கம் அளிக்கின்றன. இந்தப் பின்னணியையும் இணைத்துப் பார்த்தால் இறைவன் கூட்டணியிலிருந்து விலகிச் சென்று விடமுடியாது; வட்ட மேசைக்குள் இறைவனைச் சிக்க வைத்துக் கூட்டணியை உறுதிப்படுத்திக் கொண்டுள்ள வள்ளலாரின் சொல்லாட்சித்திறம் நினைந்து, நினைந்து போற்றத்தக்கதாகும்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கல்லாமை

### கற்றல இல்லாமை

1. **அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய**
   **நூலின்றிக் கோட்டி கொளல்.**

அரங்கின்றி – ஆடுதற்கு ஏற்ற இடம் இல்லாமல்; வட்டாடி அற்றே – உருண்டை உருட்டி ஆடுதல் போலாம்; நிரம்பிய – நிறைந்த; நூலின்றி – நூலறிவின்றி; கோட்டி கொளல் – அவையினில் ஒன்றைச் சொல்லுதல்;

நிறைந்த நூலறிவின்றி அவையினில் ஒன்றைச் சொல்லக் கூடாது; அது ஆடுதற்கு ஏற்ற இடம் இல்லாமல் உருண்டை உருட்டி ஆடுதல் போலாகும்.

அற்றே – உவம உருபு.

2. **கல்லாதான் சொல்கா முறுதல் முலை இரண்டும்**
   **இல்லாதாள் பெண்காமுற் றற்று.**

கல்லாதான் – கல்வி இல்லாதவன்; சொல் காமுறுதல் – அவையினில் சென்று சொல்ல விரும்புதல்; முலை இரண்டும் இல்லாதாள் – இயல்பாக முலை இரண்டும் இல்லாதவள்; பெண்காமுற் றற்று – பெண்மையை விரும்புவது போலாகும்.

கல்வி இல்லாதவன் அவையினில் சென்று சொல்ல விரும்புதல்

என்பது இயல்பாகப் பெண்ணுக்கு வேண்டிய முலை இரண்டும் இல்லாதவள் பெண்மையை விரும்புவது போலாகும்.

**3. கல்லாதவரும் நனிநல்லர் கற்றார்முன்**
**சொல்லா திருக்கப் பெறின்.**

கல்லாதவரும் - கல்வி இல்லாதவரும்; நனிநல்லர் - மிகவும் நல்லவராவார்; கற்றார் முன் - கல்வி அறிவு உடையார் முன்; சொல்லாதிருக்கப் பெறின் - எதனையும் சொல்லா திருந்தால்.

கல்வி அறிவு உடையவர்களின் முன் எதனையும் சொல்லாதிருந்தால் கல்வி இல்லாதவரும் மிகவும் நல்லவராவார்.

நனிநல்லர் - உரிச்சொல் தொடர்;

**4. கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும்**
**கொள்ளார் அறிவுடை யார்.**

கல்லாதான் ஒட்பம் - கல்லாதவனுடைய அறிவுடைமை; கழிய நன்று ஆயினும் - மிகவும் நல்லதாக இருப்பினும்; அறிவுடையார் - அறிவுடையவர்கள்; கொள்ளார் - அதனை அறிவுடைமையாகக் கொள்ளமாட்டார்கள்.

கல்லாதவனுடைய அறிவுடைமை மிகவும் நல்லதாக இருப்பினும் அதனை அறிவுடையவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

கல்லாதான் - வினையாலணையும் பெயர்.

கொள்ளார் - எதிர்மறை வினைமுற்று.

**5. கல்லா ஒருவன் தகைமை தலைப் பெய்து**
**சொல்லாடச் சோர்வு படும்.**

கல்லா ஒருவன் தகைமை - நூல்களைக் கல்லாத ஒருவனுடைய பெருமை; தலைப்பெய்து - கற்றவன் சேர்ந்து; சொல்லாடச் சோர்வுபடும் - உரையாடும் போது கெட்டுவிடும்.

நூல்களைக் கல்லாத ஒருவனுடைய பெருமை அவனோடு கற்றவன் சேர்ந்து உரையாடும் போது கெட்டு விடும்.

கல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

தகைமை - பண்புப் பெயர்.

**6. உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்**
**களர்அனையர் கல்லா தவர்.**

உளர் என்னும் மாத்திரையர் அல்லால் - உயிருடன் உள்ளார் என்னும் அளவினர் என்பது மட்டுமே தவிர; பயவாக் களரனையர் - பயனில்லாத களர்நிலம் போன்றவர்; கல்லாதவர் - கல்வி இல்லாதவர்.

கல்வி இல்லாதவர் உயிருடன் உள்ளார் என்னும் அளவினரே தவிர, அவர் பயனில்லாத களர்நிலம் போன்றவர் ஆவார்.

பயவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**7. நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்**
**மண்மாண் புனைபாவை அற்று.**

நுண்மாண் - நுட்பமும் மாட்சிமையும்; நுழைபுலம் - பல நூல்களில் சென்று அறிகின்ற அறிவும்; இல்லான் - இல்லாதவனுடைய; எழில் நலம் - அழகுநலம்; மண்மாண் புனைபாவை அற்று - மண்ணால் மாட்சிமைப்படப் புனைந்த பாவையைப் போன்றதாகும்.

நுட்பமும் மாட்சிமையும் பல நூல்களில் சென்று அறியும் அறிவும் இல்லாதவனுடைய அழகு நலம், மண்ணால் மாட்சிமைப்படப் புனைந்த பாவையைப் போன்றதாகும்.

மண்மாண் - மூன்றாம் வேற்றுமைத் தொகை.

புனைபாவை - வினைத் தொகை.

**8. நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே**
**கல்லார்கண் பட்ட திரு.**

நல்லார்கண் பட்ட - கற்றாரிடம் அமைந்த; வறுமையின் இன்னாதே - வறுமையைவிடக் கொடுமையானது; கல்லார்கண் பட்ட திரு - கல்லாதவரிடம் சேர்ந்த செல்வம்.

கல்லாதவரிடம் சேர்ந்த செல்வம் கற்றவரிடம் சேர்ந்த வறுமையினைவிடக் கொடுமையானது.

வறுமையின் - இன் உவம உருபு.

**9. மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு.**

மேற்பிறந்தார் ஆயினும் - உயர்குடியில் பிறந்தவராயினும்; கல்லாதார் - கல்வி அறிவில்லாதவர்; கீழ்ப்பிறந்தும் - உயர்வில்லாக்

குடியில் பிறந்தும்; கற்றார் அனைத்து இலர்பாடு - கல்வி கற்றவர் போல் ஆகமாட்டார்.

கல்லாதவர் உயர் குடியில் பிறந்தவராயினும் உயர்வில்லாக் குடியில் பிறந்து கல்வி கற்றவரைப் போல் ஆகமாட்டார்.

கீழ்ப்பிறந்தும் - சிறப்பு உம்மை.

**10. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோடு ஏனை யவர்.**

விலங்கொடு மக்கள் அனையர் - விலங்கொடு மக்களை ஒப்பிட்டால் எத்தகையர்; இலங்குநூல் - நல்ல நூல்களை; கற்றாரோடு ஏனையவர் - கற்றவர்களோடு கல்லாதவர்கள்.

மக்களுக்கும் விலங்குக்கும் எத்தகைய வேறுபாடு உண்டோ அத்தகைய வேறுபாடுதான் கற்றவர்க்கும் கல்லாதவர்க்கும் உள்ளதாம்.

விலங்கொடு, கற்றாரோடு - ஒடு, ஓடு என்பன ஒப்புமைப் பொருளை உணர்த்தின - உருபு மயக்கம்.

*(தொடரும்...)*



**26.01.2019 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில்**
**புலவர் மாமணி ஆறு. மெய்யாண்டவர்**
**இந்திரவிழவூர் எடுத்த காதை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.**

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**
**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**
**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**
**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**